மிஸ்டர் பி.எஸ். சிவஸ்வாமிஐயரவர்கள் அக்கிராசனத்தை வகித்து மிஸ்டர் கோகலேயினுடைய குணநிசயங்களைப்பற்றி விசேஷமாய் நன்குமதித்துப்பேசினர். அவர் "ஸெர்வன்ட்ஸ் ஆவ் இந்தியா ஸொஸைடி"யைப்பற்றிச் சொல்லியதைக் குறிப்பிட்டு "வித்தியாலக்ஷியமும் இந்தியாவின் தேவையும்" என்கிற தலைப்பின் கீழ் பிரஸ்தாபித்திருக்கிறோம். அவர் கனம் மிஸ்டர்கோகலேயினுடைய ஜீவியசரித்திரத்திலிருந்து நகரமாக்கள் ஒவ்வொருவரும் தெரிந்துகொள்ளவேண்டிய படிப்பினையைப்பற்றிச் சொன்னது ரஸமாயிருக்கிறபடியால் அதைக் கீழே யெடுத்துரைக்கிறோம்.

முதலாவது, மிஸ்டர் கோகலே எந்த விஷயத்தைப்பற்றிப் பேசுவதானாலும் அதைமுற்றுமுணர்ந்து முழுவதும் ஆராய்ந்துகற்ற பின்னரே அதைப்பற்றிப் பிரஸ்தாபிப்பார். அரைகுறைப் பேச்சு என்பதே அவரிடம் கிடையாது. எதைப்பற்றிப் பேசினாலும் ஆணித்தரமான வார்த்தைகளையே யெடுத்தாண்டு பேசுவார்.

இரண்டாவது, அவர் மதிவளர்வித்தையில் நிரம்பப்பழகினவர். ஆதலால் விசாலமான புத்தியும் எதையும் பாரதூரயோசனையோடுபேசும் பழக்கமும் பெற்றுள்ளார்.

மூன்றாவது, நிதானபுத்தி ஜாஸ்தி. எதையும் எண்ணித்துணியும் ஸ்வபாவமுள்ளவராதலால், துணிந்தபின் அவர் எதிலும் பின் வாங்குபவரில்லை.

நான்காவது, நிதானபுத்தியோடு நியாயம் தவறாமல் பேசும் பழக்கமும் அவருக்குண்டு. அது அவருடன் பேசுவது யாருக்கும் இனிமையாக விருக்கச்செய்தது. அவருக்கு விரோதமான அபிப்பிராய முடையவர்களிடத்தும் அவர்களுடைய மனோபாவத்தை யறிந்து பேசும் சக்தியும் அனுதாபசிந்தையுமுடையவராதலால் மனமறிந்துபேசும்சக்தி அவரிடம் விசேஷமாயுண்டு. இஃதோடெவ்விஷயத்தைப் பற்றிப்பேசினும் பேசுவோரை நேரில் மல்லுக்கிழுக்கும் ஸ்வபாவம் அவரிடம் கிடையவே கிடையாது. அவருக்கு விஷயமும் விஷய ஞானமுமே பிரதானம். ஆளைக்குறித்துப் பேசும் வழக்கமே யவரிடம் கிடையாது.

ஐந்தாவது, எதையும் விதண்டாவாதம் செய்து தான் பிடித்ததேபிடியென்று வீண்சாதனை செய்யாமல் எதிரிக்கு விட்டுக்கொடுத்து "விட்டுப் பிடித்தல்" என்னும் வகையில் காரிய சாதனை செய்வதில் சமர்த்தர்.

ஆறுவது, ஸ்வயாபம்பாராட்டாது தன்னைக் கொடுத்துழைக்கும் குணவிசேஷம் அவரிடத்தில் உண்டு.

ஏழாவது, வாதத்தில் பிடிவாத சித்தமற்றவராயினும் ஆரத்திர அமர்ந்து யோசித்து முடிவுக்கு வந்தபின் அவர் எண்ணித்துணிந்ததை ஒருக்காலும் மாற்றமாட்டார். இஃதோடு நினைத்தது முடிக்கும் ஆற்றலும் அவருக்குண்டு. இந்த குணங்களையெல்லாம் விசேஷித்துப் பேசிய பின் இவைகளைப்பார்த்து நடக்கப்பயிலவேண்டும் என்று சொன்னர்.

இந்த குணங்களெல்லாம்மேலானவைதான். ஆனல் "Worthy of the highest imitation" என்று சொன்ன இலக்கணம் அவைக்குப் பொருந்தாதென்பதை மட்டும் இங்கு குறிப்பிடவேண்டியிருக்கிறது. ஏனெனில் குருவாக்குப்படி இந்த மேலான குணங்கள் ஹிருதய சுத்தியிலிருந்துண்டாகவேண்டும். "கேட்டுக் குலைக்கும் நாய்" ஒருபோதும் "கண்டுகுலைக்கும் நாய்க்கு" ஈடாகாது. "இன்னன் திருடவருகிறன்: இன்னன் யோக்கியன்"—என்று தெரிந்து கொள்ளும் சக்தி நல்லஜாதி நாய்களுக்குண்டு. இது பிறவிக்குணம். 'குலத்தளவேயாகுமாம் குணம்' என்றபடி ஒரு நல்லஜாதிநாயின் குணம், நாய்குலைப்பதைக் கேட்டுத் தானும் கூடக்குலைக்கும் (imitation) சுபாவமுள்ள எச்சில் பொறுக்கி நாய்க்கு வருமா? வராது! அஃதேபோல ஹிருதயசுத்தி மூலமாகப் பெறத்தக்க குணங்களை அந்த ஹிருதயசுத்தி லபிக்கப் பெறுதவர்கள் நடிக்கக் கற்றதனல் அவர்க

ளுக்கு அந்தக்குணம் அமைந்துவிடாது. அவருடைய நடத்தையைப் பார்த்து நாமும் அவ்விதம் ஒழுகப்பயிலவேண்டுமென்று உண்மையில் அவாக்கொண்டு அதற்கு வேண்டிய சாதகசாதனங்களைத் தேடுகிறவர்களுக்கு குருகடாக்ஷம் எப்படியும் கிடைக்கும். குருவென்றால்(அறியாமையாகிற) இருட்டைப்போக்குகிறவர். அதாவது, மனவிருளைப் போக்கி மனத்தெளிவை யுண்டுபண்ணுகிறவர். பகவான் ஸர்வாந்தரியாமியாயிருத்தலால் எவற்றாலும் எல்லா விதத்தாலும் அவர் குருகடாக்ஷம் சாதிக்கவல்லவர்.

ஸர் எஸ். சுப்பிரமணிய அய்யர் அவர்கள் மிஸ்டர் கோகலே காலஞ்சென்றதைப்பற்றி இந்தியாவுக்கும் பிரிட்டிஷ் இராஜ்யத்துக்கு முண்டான பெரு நஷ்டத்தைப் பற்றிப் பேசியதில் "சமஷ்டி-வியஷ்டிபாவம்" பற்றி கனம் மிஸ்டர் கோகலே வியஷ்டி பாவத்தில் அடைந்த சாதனை இந்தியா சமஷ்டி பாவத்தில் அடையப்பெற வேண்டுமென்று பேசினார்.

கனம் மிஸ்டர் கோகலே தூயசித்தமுடையவர். நல்ல வித்துவான். கற்றுத்தேர்ந்தவர். ஸ்வயநாயம் பாராட்டாதவர். பொதுவிஷயங்களில் தூயஹிருதயத் தோடுழைத்தவர். அவர் குணசீலத்தால் பேரும் பிரக்கியாதியும் பெற்றவர். இதையெல்லம் உணர்ந்து அவரிடம் நாம் பெருமதிப்பு வைத்துள்ளோம். ஆனால் இந்தியாவுக்கு லக்ஷியம் அவர்தான் என்று சொல்வது முற்றும் ஒப்பத் தக்கதாகவில்லை. இந்தியாவின் சமஷ்டி லக்ஷியம் ரிஷிகளால் அனுபவரீதியாகவும் சகஜானுபவமாகவும்உணர்ந்தோதிச் சாதிக்கப்பட்டிருக்கிறது. உபநிஷத்துக்களெல்லாம் அந்த சமஷ்டி லக்ஷியத்தை யெடுத்தோதி முறையிடுகிறது. அதன் பெருமை தெரியாதவர்கள் "பால் ஆறாகவோடினாலும் நாய்க்கு நக்கித்தான் குடிக்கவேண்டு" மென்கிற பழமொழிப் பிரகாரம் அவர்களுடைய ஜீவ்யபாவ மொழியாது உயர்லக்ஷியத்தைக் குறைத்துப் பின்னப்படுத்திக் கூறினால் அது இந்தியாவின் "சமஷ்டி லக்ஷியம்" என்று மேலோரால் ஒப்பத்தக்கதாகாது.

அரசர்பிரதிநிதியவர்கள் "வித்தியாலக்ஷியத்தை"ப்பற்றி கல்கத்தா யூனிவர்ஸிடி மாணவர்களுக்குச் சொல்லிய ஹிதோபதேசத்தில் "இந்தியாவின் தேவை"யென்னவென்றும் "வித்தியாலக்ஷியம்"என்னவென்றும் காலதேச வர்த்தமானங்களுக்கிசைய நன்றாக வெடுத்துச் சொல்லியிருக்கிறார். "Character" என்று சொல்லும் "குணசம்பத்து" "Imitation" என்று சொல்லும் "நடித்தல்" சாதனையால் பெறத்தக்கதல்ல. அது தஹரோபாசனையால் ஹிருதயத்தை யுழுது பண்படுத்தி வித்துப் போட்டுப் பயிராகப் பயிர்ச்சிசெய்துவர வேண்டிய அம்சமாயிருக்கிறது. மிஸ்டர் கோகலேயவர்களுடைய குருவாகிய மிஸ்டர் ரானடேயவர்கள்தாமும் "குணசம்பத்து" "பார்த்து நடித்தலால்" பெறத்தக்க தென்று ஒப்பார். "கேட்டுக் குலைக்கிற" எச்சில் பொறுக்கி நாய் "மோப்ப மறிந்து" குலைக்கிற வேட்டைநாய் ஆகுமானால், பார்த்து நடித்தலால் குணசம்பத்துப் பெறலாமென்று சொல்வது ஒக்கும்.

ஸர் ஹாரல்ட் ஸ்டூவர்ட் அவர்கள் கனம் மிஸ்டர் கோகலேயவர்களைப்பற்றி அவருடைய குணவிசேஷங்களை யெடுத்துக் கூறிப் பேசியது மிகவும் ஒப்பத்தக்கதா யிருந்தது. அவர் காலஞ் சென்றதற்காக நாம் படும் துயர் உண்மையாயின் அவருடைய ஞாபகத்தை மனதில் வைத்து அவர் சென்ற வழிபற்றி சமஷ்டி "சேவைசாதனம்" கைப்பற்றி ஊருக்குழைத்து ஹிருதய சுத்திபெற்று பரோபகார சாதனம்பற்றி அதற்கு வேண்டிய சாதக சித்தர்களாய்ச் சாதனைசெய்து வாழவேண்டும். இது தான் அவருக்கு நாம் ஏற்படுத்தக்கூடிய உண்மையான ஞாபக சின்னம். அவருடைய உருச்செய்தமைத்தல் அவர் பேரால் 'ஸ்காலர்ஷிப்புகள்' என்கிற வித்தியாசாதக நிதியமைத்தல் இவையெல்லாம் இந்த ஒரு ஞாபக சின்னத்துக்கு உபசாதனங்களே யன்றி உண்மையான ஞாபகசின்னமாகா.

## THE FALL OF PRZEMYSL.

## ப்ர்ஸ்மிஸல் கோட்டை பிடிபட்டது.

ப்ர்ஸ்மிஸல் (Przemysl) என்பது ஆஸ்திரியாவைச்சேர்ந்த (Galicia) மாகாணத்தில் ஒரு மிகவும் முக்கியமான அரண் செய்யப்பட்ட ஸ்தானம், இது அனேக ரயில்பாதைகள் கூடும் 'ஜங்ஷன்' ஸ்தானமாயிருக்கிறது. இந்தக் கோட்டையை ருஷியர்கள் யுத்த ஆரம்ப காலத்தில் காலிஷியாவின்மீது படையெடுத்துச் சென்றபோது முற்றிகை போட்டார்கள். இத்தனை காலமாக அது பிடிபடாமலிருந்து இப்பொழுது முற்றிகை போடப்பட்ட சைனியம் 130,000 ஊணின்றி வருந்த நேரிட்டதால் பிடிபட்டதாகத் தெரிகிறது. இந்த யுத்தத்தில் எத்தனையோ நவநவமான யுத்த ஏற்பாடுகளெல்லாம் வெளிக்கு வந்திருக்கிறது. கோட்டை கொத்தளங்கள் அரண்சாதனமென்பது வெகு காலமாகக் கொண்டுள்ள அபிப்பிராயம். ஜெர்மானியர் முற்றிகை போடுவதற்கென்று ஏற்படுத்திய புதிய பீரங்கிகள் கோட்டைகொத்தளங்களையெல்லாம் ஒரு நொடியில் நாசம்செய்யும் வல்லமை வாய்ந்ததாகவிருக்கின்றனவென்பது வெளியாயிற்று. லீஜ்(Leige) கோட்டையின் முற்றிகை இந்தப் பெரிய முற்றிகை பீரங்கிகள் அவ்விடம் கொண்டு வரப்படும் வரையில்தான் தாங்கியது. அந்த பீரங்கிகள் வந்ததும் ஒருநொடியில் கோட்டைகளெல்லாம் தவிடுபொடியாகத் தகர்க்கப்பட்டுப் போயின. நாமூர் (Namur) கோட்டை அதிலும் சீக்கிரத்தில் பிடிபட்டது. ஆன்ட்வெர்ப் சிறிது காலம் எதிர்த்து நின்றும் கடைசியில் இந்த பீரங்கிகளுக்கு எதிர்த்து நிற்கமுடியாமற் போயிற்று. கோட்டை கொத்தளங்கள் யுத்தசாதனங்கள் என்று எண்ணியிருந்த எண்ணம் இந்தயுத்த நடபடிக்கையில் பாழாகப்போயிற்று. கோட்டைகளை நாலுபக்கமும் மதிள் சூழக்கட்டும் வழக்கம் பிரயோஜனமற்றதாக, பாரிஸ் அரண்முறையைப் போல் சுற்றியுள்ள வட்டாகாரமான வெளியில் இடை இடையே இடம் விட்டு கட்டப்பெற்ற கோட்டைகளும் அதற்கு வெளியில் "டிரெஞ்சுகளும்" — "அகழ்களும்" வெட்டி பெரிய பீரங்கிகளை மறைவிடமாக வைத்து ஓரிடமிருந்து ஓரிடம்போக லேசான ரயில்பாதைகள் அமைத்து, எதிரிகள் பீரங்கியை அண்டவிடாமலடிப்பதால் முற்றிகை தாங்கும் சாதனம் பயன் படுவதாகச் செய்யப்பெறலாம் என்பது ஸ்பஷ்டமாக வெளியாயிற்று.




ப்ர்ஸ்மிஸல் என்கிறபட்டணம் விஸ்துலாவின் உபநதியாகிய (San) ஸான் நதிதீரத்தின் கரையில் இருக்கிறது. அதே நதியின் கரையிலுள்ள ஜரோஸ்லா (Jaroslaw) வுக்குச் சிறிது தென் கிழக்கே யிருக்கிறது. காலிஷியாவின் முக்கிய பட்டணங்களில் ஒன்று. அது இருக்குமிடத்தை மேலே காட்டியிருக்கும் படத்தில் காணலாம். இந்த யுத்தத்தில் நீடித்த காலம் முற்றிகைதாங்கிய பட்டணம் இது.

ருஷியர் இதைக் கடைசியாகப் பிடித்துக் கொண்டது. 'காலிஷியா'வில் அவர்கள் பிடித்துக்கொண்ட இடங்களை ஸ்திரமாக வசதி செய்துகொண்டிருக்க அனுகூலமாகும். அன்றி இந்தக் கோட்டையை முற்றிகை போட்டிருந்த ருஷியசைன்யம் வேறு இடங்களில் உபயோகிக்கச் சாதகமாகும். இங்கிருந்து ருஷியர் க்ராகோ (Cracow) பட்டணத்தைப் பிடிக்க யத்தனிப்பார்களென்று தோன்றுகிறது. ஆஸ்திரியா சைன்யம் பலபட்டடை ஜாதியார் சேர்ந்ததாக விருப்பதால் இந்த யுத்தத்தில் அவர்கள்பேர் விளங்கவில்லை. ஆனல் ப்ர்ஸ்மிஸல் முற்றிகையைத் தாங்கின சைன்யத்தின் வீரதீரம் இந்தயுத்த சரித்திரத்தில் பிரக்கியாதிபெற்று விளங்குமென்பதிற் சந்தேகமில்லை.

---

"THE ORIGIN AND ISSUE OF THE WAR."
"இந்த யுத்தத்தின் மூலமும் முடிவும்."

லண்டன், மார்ச்சுமீ 22உ.—ஆங்கிலேய அந்நியதேச மந்திரியாகிய ஸர் எட்வர்ட் க்ரே அவர்கள், "இந்த யுத்தத்தின் மூலமும் முடிவும்" என்னும் விஷயமாய்ச் செய்த பிரசங்கமொன்றில், பிரிடிஷார் பிரேரேபித்தபடி ஆஸ்திரியாவுக்கும் ஸெர்பியாவுக்குமுள்ள மனஸ்தாப வித்தியாஸங்களைத் தீர்க்கவென்று ஐரோப்பிய தேசாதிகாரிகள் சேர்ந்த 'கான்பரென்ஸ்' ஒன்று கூட, ஜெர்மனி சம்மதித்திருந்தால் இந்த யுத்தத்தினல் நேர்ந்துவரும் அபாரமான உயிர்நஷ்டம் பொருள் நஷ்டமெல்லாம் நேரக் காரணமிருந்திருக்காது: ஜெர்மானியர் பிரிடிஷார் தங்களிடம் அநுகூலசித்தமுடையவர்களா யிருப்பதையுணர்ந்தும் உணராதார்போல் சண்டைக்குக் கிளம்பினர்கள். இப்பொழுதுள்ளார் ஞாபகத்துக் கெட்டினமட்டும், ஜெர்மனியால் நேர்ந்த ஐரோப்பிய யுத்தங்களில் இது நான்காவதாகும். இனி இம்மாதிரி யுத்தம்செய்யும் சக்தியின்றி ஜெர்மனி யொடுங்கப் பெறும் வரையில் இந்தச் சண்டையைத் தொடர் பிடியாகப்பிடித்து நடத்தத் தீர்மானித்திருக்கிறோம். ஜெர்மனியின் கொட்டம் இஃதோடு அடங்கிவிட வேண்டுமென்பது முடிவான தீர்மானம். அந்தத் தீர்மானத்தை நிறைவேற்றியே சாதிப்போம்" என்றூர். கூட்டாளிகள் எல்லாரும் மனம் ஒத்துப் போர்செய்வதைப் பற்றிப் புகழ்ந்துபேசினர்.

---

"VISCOUNT BRYCE ON INDIA."
இந்தியாவைப்பற்றிப் ப்ரைஸ் பிரபு பேசியது.

லண்டன், மார்ச்சுமீ 19உ.—இந்தியாவிலிருந்து சென்ற சைன்யங்களின் விஷயமாய் லெப்டினென்ட் கர்னல் யேட் (Lt.-Col. Yate) அவர்கள்செய்த உபந்யாச காலத்தில் விஸ்கௌன்ட ப்ரைஸ் (Viscount Bryce) அவர்கள் அக்கிராசனம் வகித்துப்பேசியதில் இந்தியாவின் ஜனங்களும் அரசர்களும் இந்த ஆபத்துக்காலத்தில் உடனிருந்துதவ இசைந்து இந்தியதுருப்புகள் வெகு வீரதீரத்தோடு சண்டை செய்துவருவது ஓர் அற்புத சம்பவமென்றும் இனி இந்தியாவும் இங்கிலாந்தும் சமயோக்கியதைபெற்று அந்நியோந்நியமாக வாழ்ந்துவர ஆஸ்பதமுண்டாகுமென்றும் இதனல் பிரிடிஷ் ராஜ்யத்தில் இந்தியா முக்கிய ஸ்தானம்வகிக்க ஹேதுவுண்டாகலாமென்று எண்ண விடமிருக்கிறது என்றும் சொல்லிப்பேசினர்.

---

## THE POST-PUBERTY MARRIAGE BILL.

We have received the following note from the Honorable Mr. V. S. Srinivasa Sastriar, the Member in charge of the Post-Puberty Marriage Bill in the Madras Legislative Council. We repeat we shall be glad to publish the opinions of Indian Mothers who are in favour of the Bill and who wish to convince their sisters who are opposed to it.

"Triplicane, 9-3-15. Dear Sir, I am grateful for a copy of the *Viveka Chintamani* for February containing articles on the Post-Puberty Marriage Bill now before the Madras Legislative Council.

Yours sincerely,

V. S. SRINIVASAN.

*To the Editor, Viveka Chintamani, Lalitalaya, 19, Adam Street, Madras, S.*"

---

## ருதுமதிவிவாக மசோதா.

### சட்டநிரூபணசபையில் பிரஸ்தாபம்.

இதைப்பற்றிச் சென்ற பிப்ரவரி மாசத்துச் சஞ்சிகையில் எழுதியிருந்த விஷயங்களடங்கிய சஞ்சிகைபொன்றை கனம் மிஸ்டர் வி. எஸ். ஸ்ரீனிவாஸ சாஸ்திரியாரவர்களுக்கு அனுப்ப அவர் அதைப்பெற்றுக் கொண்டு எழுதிய கடிதத்தை மேலே பிரசுரித்திருக்கிறோம். சென்ற பிப்ரவரியீ 2-உ கூடிய சட்டநிரூபண சபை மீட்டிங்கில் கனம். மிஸ்டர் ஆர். வி. நரஸிஹ்ம ஐயரவர்கள் கேட்ட பல கேள்விகளில் ஒன்று பின்வருமாறு:—

"6-வது கேள்வி.—(a) கனம். மிஸ்டர் ஸ்ரீனிவாஸ சாஸ்திரியாரவர்களுடைய ருதுமதி விவாகமசோதா சம்பந்தமாக கவர்ன்மெண்டாருக்கு பிரத்தியேகஙபர்களிட மிருந்தாவது பொதுஜனசபைகளிட மிருந்தாவது அதுவிஷயமாய்க் கூடிய பொதுஜனக் கூட்டங்களிடமிருந்தாவது அவர்கள் அபிப்பிராயங்களைத்தெரிவித்து மனுக்கள் வந்துள்ளனவா?

(b) அப்படியானால், யார் யாரிடமிருந்து?

(c) எத்தனை மனுக்கள் யார் யார் அனுப்பியவை அதற்கு ஆதார அனுகூலமாக விருக்கின்றன? எத்தனை மனுக்கள் யார் யார் அனுப்பியவை அதற்குப் பிரதிகூலமாகவிருக்கின்றன?"

"6. விடை.—(A) 1915-ம்ஸு ஜனவரியீ 26உ வரையில் பின் வருபவர்களிடமிருந்து அவர்கள் அபிப்பிராயங்களைத் தெரிவிக்கும் மனுக்கள் வந்திருக்கின்றன.

(1) 1914 ஸு டிஸம்பரீ கோபிசெட்டிபாளையத்தில் கூடிய பொதுக்கூட்டத்தின் தலைவர் ம-ா-ா-ஸ்ரீ பி. சீதாராம அய்யர் அவர்கள்.

(2) சித்தூர்ஜில்லா சிறுத்தானூர் ஸ்ரீமான் மாத்வசித்தாந்த ஒன்னுஹினி சபையின் கௌரவகாரியதரிசி.

(3) குண்டூர் ஜில்லா கொள்ளூரில்1915ஸு ஜனவரியீ 10உ கூடிய பொதுக்கூட்டத்தலைவர் ம-ா-ா-ஸ்ரீ ஜெ. லக்ஷ்மி நாராயண சாஸ்திரிகள்.

(4) திருவல்லிக்கேணியில் 1915ஸு ஜனவரியீ 10உ கூடிய பொதுக்கூட்டத்தின் தலைவர் ம-ா-ா-ஸ்ரீ டி. ஆர். இராமச்சந்திர அய்யர் அவர்கள்.

(5) சிதம்பரம் தாலூக்கா தச்சக்காடு கிராமத்து ம-ா-ா-ஸ்ரீ பண்டிதர் ஆர். நடேச சாஸ்திரிகள் வகையரா.

(6) மலையாளம் ஜில்லா பாலக்காடு தாலூகா ஆதித்தியபுரம் கிராமத்தில்கூடிய பொதுக்கூட்டத்தலைவர் ம-ா-ா-ஸ்ரீ ஏ. ஆர். நாராயண அய்யர் அவர்கள்.

(7) விசாகபட்டணம் உத்கால் சமாஜத்துத் தலைவர் ம-ா-ா-ஸ்ரீ விக்கிரமதேவ வர்மா அவர்கள்.

(8) நந்தியாலில் 1915ஸு ஜனவரியீ 1:, 14-ந்தேதிகளில் கூடிய பொதுக்கூட்டத்தலைவர் ம-ா-ா-ஸ்ரீ B. இராமா சாஸ்திரிகாரு.

(9) கஞ்சம் ஜில்லா உரியசமாஜத்துக் காரியதரிசி.

(10) 1915ளூ ஜனவரிமீ 10உ கும்பகோணத்தில்கூடிய பொதுக்கூட்டத் தலைவர் ம-ா-ா-ஸ்ரீ ராவ்பஹதூர் என். கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் அவர்கள்.

இவைகளில் (6) இலக்க மிட்ட மனு அந்த மசோதாவுக்கு ஆதார அனுகூலமாக விருக்கிறது. மற்றவையெல்லாம் பிரதிகூலமாகவே யிருக்கின்றன. (7), (9) மனுக்கள் உரியா ஜாதியாருக்கு அந்த மசோதா நிபந்தனைகள் கூடாதென்று ஆக்ஷேபிக்கின்றன.

இம்மசோதா விஷயமாக ஹிந்துக்களில் பெண்களைப் பெற்ற தாய்மார்கள் தங்கள் அபிப்பிராயத்தைத் தெரிவித்தால் பிரசுரிக்கத் தயாராயிருக்கிறோம். இதற்கு அனுகூலமான அபிப்பிராயம் கொண்டவர்கள் பிரதிகூலமா யிருப்பவர்கள் மனதைத் திருப்பி அவர்கள் வழிக்குக் கொண்டுவரப் பிரயத்தனப்பட்டால் அவர்கள் செய்முயற்சிக்கு அனுகூலமாக அவர்கள் எழுதுவதைப் பிரசுரிக்கத் தயாராயிருக்கிறோமென்று மறுபடியும் தெரிவித்துக் கொள்கிறோம்.

சென்ற பிப்ரவரிமீ வெளிவந்த அபிப்பிராயம் இந்தியமாதர் கோரிக்கைக்கிணங்க, கனம் மிஸ்டர் ஸ்ரீனிவாஸ சாஸ்திரியாரவர்களுக்கும் சட்ட நிருபணசபை மெம்பர்கள் தெரிந்து கொள்ளவேண்டியதன் பொருட்டு சட்ட நிருபண சபை காரியதரிசி யவர்களுக்கும், *ஆலோசனை சபையிலுள்ள கவர்னர் அவர்களுக்கும் அனுப்பப்பட்டிருக்கிறதாக அறிகிறோம்.

* As we go to press, we find the following has been placed at our disposal :— The Secretary to Government of Madras in the Legislative Department, has written to the Honorary Secretary to the Social Service Branch of the Ananda Mission, acknowledging receipt of his letter forwarding the February issue of the "Viveka Chintamani," containing articles on the Post-Puberty Marriage Bill, with the intimation that it "will receive due attention."

## "SOCIAL SERVICE COLUMN."

### "சமஷ்டிசேவை ஸாதனம்."

THE MADRAS SOCIAL SERVICE LEAGUE.

*By the Boy-Secretary of "The Children's Day" Movement.*

சென்னை சமஷ்டிசேவை ஸாதன சங்கம்.

"We are all babies of the world in this sort of work though we may be young or old in age."—*Mrs. Whitehead, President of the Madras Social Service League.*

OUR MOTTO:—LIVE IN "HOPE," WORK IN "FAITH" & REALISE IN "LOVE."

"This is my prayer to Thee, My Lord,—
"Strike, strike at the root of penury in my heart.
"Give me the strength lightly to bear my joys and sorrows.
"Give me the strength to make my love fruitful in service.
"Give me the strength never to disown the poor or bend my knees before insolent might.
"Give me the strength to raise my mind high above daily trifles.
"And Give me the strength to surrender my strength to Thy Will with Love."—*Gitanjali.*

—*From the V. C. Children's Record Number.*

ஒரு தேசமானது முன்னுக்கு வரவேண்டுமென்றால் அது அதனுடைய சிறுவர்களை நன்றாகத் தேறப்பழக்குவதால் முடியுமேயன்றி வேறு எவ்வகையாலும் முடியாது. பாலர்கள் குழந்தை மனமுடையவர்கள்: அப்படியென்றால் கள்ளங் கபடற்றவர்கள். எப்படி ஒரு செடியானது அதனுடைய இளமைப் பருவத்தில் சரியாக நிமிர்த்தப்பட்டால் பிறகு கோணலா யில்லாமல் நேராக மரமாய் வளருமோ, அதுபோல, பாலர்களை இளமைப் பருவத்திலேயே சரியாகப் போதனைபண்ணி நல்வழியிற் பழக்கினால் அவர்கள் பெரியவர்களானதும் அதன்படியே நடப்பார்கள். அதனாலேயே "இளமையிற்கல், சற்றபடிநில்" என்று ஔவையாரும் சொல்லியிருக்கிறார். இளமையிலே கற்றால் தான் பெரியவனானதும் அதன்படி நடக்க முடியும். "கல்" என்றால் பள்ளிக்கூடத்தில் வாசித்துப் பரீக்ஷை தேறுவது மட்டுமல்ல.

உண்மைத் தாயாகிய ஜன்மபூமிக்கும் நம் சகோதரர்களாகிய இதரர்களுக்கும் தான் செய்ய வேண்டிய கடமையைச் சரியாகச் செய்ய அறிந்து செய்வதே கல்வியினழகு.

அக்கடமைகளைச் சரியாகச் செலுத்த அறிவு பிரதானம். அதற்கு அஸ்திவாரமாக இருக்க வேண்டு மென்றே துரைத்தனத்தார் மிக்க பணம் செலவழித்து பள்ளிக்கூடங்களைப் பல இடங்களிலும் ஏற்படுத்தி யிருக்கிறார்கள். ஆனால் அவைகளின் அஸ்திவாரம் "சரியாக இல்லை" என்பது பெரியோர்களின் அபிப்பிராயம். ஆயினும் பல பள்ளிக்கூடங்களிலுள்ள சில உபாத்தியாயர்களின் குணவிசேஷத்தினால் துரைத்தனத்தார்களின் எண்ணம் ஒருவாறு நிறைவேறிவருகிறது. போதனைமாத்திரத்தில் நிறைவேறிவரினும் அதை உணர உணர்ந்து அப்பியசியாமல் வீணாக்கிவிடும் மாணவர் பலர். ஆகவே பாலர்களில் சரியாக சிக்ஷைபெற்றுத் தேறுகிறவர்கள் சிலரே. அப்படி சிக்ஷை பெற்றுத் தேறினவர்களில் காலஞ்சென்ற ஸ்ரீமான் கோகலே அவர்கள் ஒருவர். ஆயிரக் கணக்கான பள்ளிக்கூடங்களில் படிக்கிறவர்களில் சரியாக சிக்ஷை பெற்றுத்தேறுகிறவர்கள் வெகு சிலர் என்றே நினைக்கிறோம்.

பள்ளிக்கூடங்களில் படிக்கும் இதரர்கள் அதை சோற்றுப்படிப்பாக பாவித்து வயிறு பிழைக்கிறவழியென்னவென்று அதையே பிரதானமாகப் பார்த்துக்கொண்டு போகிறார்கள். அதுகூடப் படியாமல் போகிறவர்கள் அநேகர். அவர்கள் தற்காலப்பள்ளிக்கூடச் செலவை உத்தேசிக்கில் ஏழைகள். பள்ளியிற் படிப்பதற்குப் பிடிக்கும் செலவு வரவர மிகவும் ஜாஸ்தியாய் வருகிறது.

வருஷாந்திரம் ஒரு பையனுக்கு ரூபா. 100 ஆகிறது. இம்மாதிரியாக அவன் 10, 15 வருஷங்கள் படிக்கவேண்டியிருக்கிறது. அப்படி செலவழித்துப் படித்தாலும் சிலர் தான் பலனடைகிறார்கள். ஆகையால் ஏழைகள் தகுந்த மனோசிக்ஷையில்லாமல் அவதிப்படுகிறார்கள். இந்தியா ஒரு வியவசாய தேசம். அதனுடைய பாக்கியமெல்லாம் வியவசாயமே. வியவசாயிகள் படிப்புமுதலிய சிக்ஷையில்லாதனால் தாங்களு சுகப்பட்டு இதரர்களையும் சுகிக்கச் செய்ய வழியிருந்தும் அதை அறிவில்லாமையினால் அறியாமல் கஷ்டப்படுகிறார்கள். இவர்களுக்கு சரியான வித்யாசிக்ஷை இனமாகக் கொடுத்து ஒழிவு நேரங்களில் பள்ளிப் போதனை செய்வதும், இந்தியாவின் சுபிக்ஷத்துக்குக் காரணமாகிய அதனுடைய சிறுவர்களை சரியாக சமஷ்டி சேவையில் பழக்குவதுமே சென்னை சமஷ்டிசேவை சங்கத்தின் கருத்து. மேற்படி சங்கத்தினுடைய வருஷாந்திரக்கூட்டமானது இந்த மார்ச்சு மாதம் 27-ந் தேதியன்று மாலை சென்னை பிஷப் அவர்களின் தோட்டத்தில் கூடிற்று. சங்கத்தினுடைய பிரஸிடெண்டாகிய மிஸ்ஸஸ் வொயிட்ஹெட் அவர்கள் அக்கிராசனம் வகித்தார். மேற்படி சங்கத்தின் வருஷாந்திர ரிபோர்ட்டானது படிக்கப்பட்டு இவ்வருஷத்திற்கு உத்தியோகஸ்தர்கள் தெரிந்து நியமிக்கப்பட்ட பிறகு மிஸ்டர் எஸ். ஸ்ரீனிவாச அய்யங்கார் அவர்கள் சங்கம் செய்திருக்கும் வேலையைப்பற்றிப் பின்வருமாறு பிரசங்கித்தார்.

சென்னையில் பலசங்கங்கள் இருந்தபோதிலும் அவைகளில் சரியாக உழைக்கும் சங்கங்கள் சிலவே. அவைகளில் இது ஒன்று. இம்மாதிரி சங்கமொன்று இருப்பதே சிலருக்குத் தெரியாவிட்டாலும் இதை அறிந்தவர்களெல்லாம் இதை அங்கீகரித்து இஃதுடன் உத்ஸாகத்தோடு உழைத்திருக்கிறார்கள்.

இச்சங்கத்தின் வேலையானது பின்வருமாறு பிரிக்கப்பட்டுச் செய்யப்பெற்று வருகிறது. அவைகளில்:—

1. ஆஸ்பத்திரிகளில் வியாதியால் பீடிக்கப்பட்டிருக்கும் வியாதியஸ்தர்களுக்கு படிக்கப் புஸ்தகங்கள், பத்திரிகைகள் முதலியவைகள் கொடுத்து இதர உதவி செய்கிறது ஒன்று. இராப்பள்ளிக்கூடங்கள் வைத்து ஏழைச் சிறுவர்களுக்கும் கூலிவேலை செய்பவர்களுக்கும் இனமாகப் படிப்புச்சொல்லிக் கொடுக்கிறது மற்ருென்று. தாழ்ந்தாரைச் சீர்திருத்தி வாழவைக்கிறது. (Elevation of Depressed Classes). அவர்களுக்காக ஐக்கிய நாணய உபகாரசங்கங்கள் ஆரம்பித்து கடன் உடன்பட்டார்க்கு அதைத்தீர்க்க ஒத்தாசை செய்கிறது. இன்னும் இவை போல்வன. கடைசியில் சொன்ன கடனுதவிவேலை சில நாட்களுக்கு முன்தான் ஆரம்பிக்கப்பட்டது. கொடுக்கப்பட்ட கடன்களெல்லாம் சீக்கிரத்தில் திருப்பிக் கொடுக்கப்பட்டன. இது வரையிலும் அவைகள் சரியாக நடந்து வந்திருக்கின்றன. இவைகளோடுகூட, இவ்வருஷம் அனுதைக் குழந்தைகளுக்கு ஒரு ரக்ஷகசாலை ஆரம்பிக்கப்படு மென்றும் சொன்னுர். அவர், அங்கத்தினர்கள் உத்சாகத்தோடு உழைக்க வேண்டுமென்றும், அவர்கள் சங்கத்தைச் சேரும்பொழுது சில வாக்கு சபதங்கள்செய்ய வேண்டியிருக்கிறதென்றும், அவர் தானும் அப்படியே வாக்குசபதம் செய்திருப்பினும் அதன்படி நடந்ததில்லையென்றும், அவர்கள் அப்படியிராமல் அதன்படி நடக்க வேண்டுமென்றும், சங்கத்தின் வேலை நடப்பதற்கு அவர்களுக்கு ஒரு கட்டட மிருக்கவேண்டு மென்றும் சொல்லி சபையார் அவர் சொன்னதைக் கொண்டாடிக் கரகோஷம் செய்யப் பேசிமுடிக்கலானுர்.

பிறகு கனம் மிஸ்டர் எம். ராமச்சந்திரராவ் அவர்கள் எழுந்து பேசினர். அவர் பேசியதின் சுருக்கம் இது:—

பம்பாயிலும் இம்மாதிரி சங்கமொன்று இருக்கிறது. அது பலதுறைகளிலும் இறங்கி உழைத்து வருகின்றது. இச்சென்னைச் சங்கமானது தான் செய்யப்போகும் வேலைகளைக் குறுக்கி, அவைகளைப் பூரணமாய்ச் செய்ய வேண்டும். இச்சங்கமானது குடியை நிறுத்த முயற்சி செய்யவேண்டும். சென்னையில் பல மதுக்கடைகளிருக்கின்றன. வருஷாவருஷம் குடியும் அதிலிருந்து சர்க்காருக்கு வரும் படியும் ஜாஸ்தியாய்க்கொண்டே வருகின்றது. சிலர் 'ஏழைகளுக்குச்செல்வமதிகமாய்விட்டது அதனுல் குடியுமதிகமாய் விட்டது' என்று சொல்லுகிருர்கள். 1913-ம் வருஷம் வெளியான ரிபோர்ட்டில் ஹிந்துக்களில் 100-க்கு 25 பேர்கள் தான் குடிக்கின்றதில்லை: இதர 75 பேர்களும் குடிக்கிருர்களென்று சொல்லப்பட்டிருந்தது. குடியே கீழ்ஜாதிகளுக்கு கழுத்தறுக்கும் கத்தியாயிருக்கின்றது. ஆகையினுல் இச்சங்கமானது குடிவிலக்கைப் பற்றி (Temperance Movement) உழைத்தால் நன்ருயிருக்கும்.

இரண்டாவது, இங்கு சிசுக்கள் மரணம் ஜாஸ்தியாயிருக்கிறது. மரண ரிபோர்ட்டுப்படி ஆயிரத்தில் 45-பேர் ஒரு வருஷம் கூட ஆகாத சிறு குழந்தைகள். இச்சிசு மரணங்களில் முக்கால்வாசிப்பேர் பின்வரும் காரணங்களாலிறந்தார்களென்று சொல்லப்படுகிறது.

அவைகள்:—

1. தாய்மார்களின் அறிவில்லாமை.

2. சீதோஷ்ண குளிர்காற்றுப்பட்டு நோவு கொள்ளல்.

3. கலப்புப்பால் முதலியன.

இதற்காக முனிஸிபாலிடியார் சுத்தமான பாலைக் குறைந்தவிலைக்கு விற்க 10 ஆயிரம் செலவிட்டு ஒரு 'டிபோ' ஏற்படுத்தினுர்கள். ஆனுல் அது சரியாக நடைபெறவில்லை. ஆகையினுல் இச்சங்கமானது இவ்விஷயத்தையும் கவனிக்கவேண்டும். அவர்கள் தாய்மார்களுக்குப் போதிக்கவேண்டும்.

3. துரைத்தனத்தார் கீழ்ஜாதிகளுக்கு சுகாதாரத்தைப் பற்றிப் போதிக்க ஜாலவிளக்குப் படங்களெடுத்துக் காட்டச்சொல்லியிருக்கிறார்கள். நீங்களும் அப்படியே செய்ய வேண்டும்.

பிறகு மிஸ்ஸஸ் வொயிட்ஹெட் அவர்கள் எழுந்து பேசியதின் சுருக்கம்:—

நாம் வயதில் பெரியோர்களா யிருப்பினும் வாலிபர்களாயிருப்பினும் உலகத்தில் சமஷ்டி சேவை செய்யும் இவ்விஷயத்தில் சிறு குழந்தைகளே. நாம் பின் வருகிறதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும். அதாவது :—

1. நாம் கல்வியைப் பெற்றிருக்கிறோம்.

2. இவ்வுலகத்தில் ஒரு பதவியை அடைந்திருக்கிறோம்.

இவ்விரண்டுமில்லாமல் கீழ் ஜாதிகளும் இதரர்களும் இருக்கிறார்கள். அவர்களின் உபயோகத்திற்காக நாம் நமது கல்வியையும், கனதனத்தையும், பதவியையும் உபயோகிக்க வேண்டும். இருக்கிறவர்கள் இல்லாதவர்களுக்குக் கொடுக்கவேண்டும். மேட்டிலிருக்கும் ஜலம் ஜலமில்லாமலிருக்கும் பள்ளத்திற்குப் போவது போலவும் பயிருக்குப் பாய்ச்சும் ஜலம் புல்லுக்கும் பாய்வது போலவும் நமக்கிருப்பதை இல்லாதவர்களுக்காக உபயோகிக்கவேண்டும். துரைத்தனத்தார் இதைச் செய்து வருகிறார்கள். ஆனால் அவர்களால் ஒரு சமஷ்டியாகச் செய்ய முடியுமே யன்றி தனித்தனியாகச் செய்யமுடியாது. நாமே அதைச் செய்யவேண்டும். நாம் இவ்வருஷம் சுகாதார உத்தியோகஸ்தரான "ஹெல்த் ஆபிஸர்" கேட்டுக்கொண்டபடிக்கும் மிஸ்டர் ராமசந்திரராவ் அவர்கள் புத்திமதிப்படிக்கும் குடிவிலக்கு வேலையை எடுத்துக் கொள்ளுவோம். நாம் நமது கருத்தை நிறைவேற்றும் முறை இது:—

ஒரு தெருவையாவது ஒருகிராமத்தையாவது எடுத்துக்கொண்டு ஒவ்வொன்றையும் நாம் பூரணமாக ஆராய்கிறோம். இங்கு மங்குமாய் எங்கும் ஒரு கருத்து மில்லாமல் உபந்நியாசம் செய்கிறதில்லை. அங்கத்தினர்கள் ஞாபகத்தில் முக்கியமாய் வைத்துக் கொள்ள வேண்டியது, தாங்கள் இவ்விஷயத்தில் சிறுவர்கள் என்றும் தாங்கள் ஒருவருடன் ஒருவர் கலந்து பேசி தங்களை உளருக்குழைக்கப் பழக்கிக்கொண்டு இதரர்களையும் பழக்க வேண்டும் என்பதே.

பிறகு ம-ா-ா-ஸ்ரீ விஜயராகவாசாரியார் அவர்கள் எழுந்து பேசிய விவரம் இது:— சிறுவர்கள் சரியாக நல்வழியிற் பழகுவதற்கு இதைப்போல் வேறு சாதனம் கிடையாது. சிறுவர்களுக்கு இருக்கும் உதவி சாதனங்கள் தங்களுக்கில்லை யென்று பெரியோர்களுக்கு வருத்தம். சிறுவர்கள் இம்மாதிரியே நல்வழியிலுழைக்கப் பழகவேண்டும். முதல் ஆரம்ப காலத்தில் ஸ்வாரஸ்ய மில்லாததாய்த் தோன்றினும் கடைசியில் மிகவு முபகார ஸாரமுள்ளதாயிருக்கும் பிறகு கூட்டம் கலைந்தது.

நாம் சிறுவர்கள். பெரியோர்கள் நம்மிடமிருந்து எதிர்பார்க்கும் உதவியைச் செய்வதற்கு வேண்டிய உண்மைப்பயிர்ச்சியை அடைய நாம் எத்தாலும் முயற்சிக்க வேண்டும். அப்படியே நம் சிறுவர்கள் முயற்சிப்பார்களென்று நம்புகிறோம்.

## CHILDREN'S PAGE. சிறுவர்க்கான பக்கம்.

### பாலபோத சிக்ஷாசாதனம்.

ON SOCIAL INTERCOURSE.

### நால்வர் முன்னிலையில் பேசவேண்டியவிதம்.

கேள்வியின் பெருமை.

"செல்வத்துட் செல்வஞ் செவிச்செல்வ மச்செல்வஞ்
செல்வத்து ளெல்லாந் தலை"—

என்று கேள்விச் செல்வத்தின் பெருமையைக் கூறிய திருவள்ளுவர், அதே அதிகாரத்தில் அதன் பெருமையைக் கூறியிருக்கிறார்.

"எனைத் தானு நல்லவை கேட்க வனைத்தானு
மான்ற பெருமை தரும்"—திருக்குறள்.

கேள்வியில் பேசுதலும் அடங்குமாதலால் நமது சிறுவர்கள் நால்வர் முன்னிலையில் எவ்விதம் பேசவேண்டு மென்பதை இவ்விடம் விசாரிப்போம். நால்வர் என்றால் நான்கே பெயர்கள் என்பதல்ல. பலபேர் முன்னிலையிலாவது தன்னைச் சேர்ந்த பாடசாலைத் தோழர்கள் பலரின் நடுவேயாவது பொதுக் கூட்டங்களிலும் சபைகளிலுமாவது என்று பொருள் படும்.

பேசுவதற்கு ஆரம்பம் செய்யும் முன்னரே தன்னைச் சூழ்ந்துள்ள மனிதர்கள் நற்குணங்களும் அந்தஸ்தும் பொருந்தியவர்களா? எனத்தெரிந்து கொள்ளல்வேண்டும். இவைகளை யறியத்திறமையில்லையாயின் மௌனமாயிருப்பதே நலமாகும். நாம் அவைகளைத் தெரிந்து கொண்டபிறகு இன்ன விஷயம்பேச வேண்டுமென்பதை ஞாபகப்படுத்திக் கொண்டு வரவேண்டும். பின்பு பேசத்தொடங்கல் வேண்டும்.

படிப்பிலும் வயதிலும் அந்தஸ்திலும் பெரியவர்கள் நம்மைக்குறித்துக் கேட்டாலொழிய பதில் சொல்வதாவது நமது அபிப்பிராயத்தை வெளியிடுவதாவது முறையல்ல. நாம் சொல்லும் ஒவ்வொருபதமும் பொருளுடையதாயும் அவசியமானதாயும் ஸத்தியமாயும் பிழையின்றியும் இருத்தல் வேண்டும். நாம் சொல்லும் ஒவ்வொருசொல்லும் இனிமையாயும் ரஸவத்தாயுமிருப்பதுடன் கடூரமின்றியுமிருத்தல் வேண்டும்.

பிறரை நட்புக்கோள்ளும் விதம்.

"செயற்கரிய யாவுள நட்பினது போல்
வினைக்கரிய யாவுள காப்பு."

மேற் கூறியுள்ள குறளால் ஆசிரியர் பொய்யா மொழிப் புலவர் "நட்பினைப் போன்ற காப்பு" பிரி தொன்றில்லை யென்பதைச் சொல்லியிருக்கிறாராதலாலும் நமக்குத்தெரிந்தவரையில் பெரும்பான்மையும் உறவினர்களைவிட நண்பர்களே இடுக்கணில் உதவி புரிபவர்களாக இருக்கின்றமையாலும் நட்பின் பெருமையைப்பற்றி அதிகம் கூறுவது மிகையாகும்.

உத்தமர்களின் நட்பே கொள்ளத்தக்கதாதலாலும் உத்தமர்கள் யாவர் என அறிவது அவர்களின் குணங்களைக் கொண்டே கூடுமானதாலும் உத்தம, மத்தியம, அதமர்களின் குணகுணங்களை இங்கு அறியப் புகுவது முக்கியமாகும். உத்தமர்களின் நட்பு சிலையிற் செதுக்கிய வெழுத்துப்போல் அழிவற்றது. மத்தியமர்களின் நட்பு மணலில் எழுதிய வெழுத்துப்போல் அழிக்கவிருப்ப முள்ளவனால் அழிக்கத்தக்கது. அதமர்களின் நட்போ நீரிலெழுதிய வெழுத்துப் போல் உண்டான பொழுதே அழிந்து விடுகின்றது. துவேஷம் உத்தமரிடம் ஜலரேகைபோலவும் மத்தியமரிடம் மணலில் எழுதிய வெழுத்துப் போலவும் அதமரிடம் சிலையிற் செதுக்கியவெழுத்துப் போலவுமிருக்கும்.

"சொல்லாமலே பெரியவர் சொல்லிச்சிறியர் செய்வர்
சொல்லியுஞ் செய்யார் கயவரே—நல்ல
குலாமாலைவேற் கண்ணாய்! கூறுவமை நாடிற்
பலாமாவைப் பாதிரியைப் பார்".

என்றபடி உத்தமர்கள் புஷ்பிக்காது பலன் கொடுக்கும் பலா முதலிய விருக்ஷம் போல் கொடுக்கிறேனெனக் கூறாது கொடுப்பர். மத்தியமர்கள் புஷ்பித்தபின்பே பலனைக் கொடுக்கும் மாவிருக்ஷம் போல் கொடுக்கின்றேனெனக் கூறியே கொடுப்பர். அதமர்கள், புஷ்பித்த பின்பும் பலனைத்தராத பாதிரிவிருக்ஷம்போல், கொடுக்கின்றேனெனக் கூறியும் கொடார். ஒரே மனிதனுக்கு அந்தந்த சேர்க்கையால் சுபாவம் நானுவிதமாய் மாறுகின்றது. நீர் ஒன்றே கடல் நடுவிலிருக்கும் முத்துச் சிப்பியினிடையிலிருப்பின் முத்தாகின்றது. அஃதே தாமரை யிலையினிடையிலிருப்பின் முத்துப்போல் பிரகாசிக்கின்றது. அது கொதிக்கு மிரும்பில் விழுந்தால் ஸ்வரூபமற்றதாகின்றது. ஆனதால் உத்தமர்களின் நட்பே சிறந்ததென்றறிக.

"கருத்துணர்ந்து கற்றறிந்தார் கேண்மை பெஞ்ஞான்
குருத்திற் கரும்பு தின்றற்றே—குருத்திற் [றும்
கெதிர்செலத் தின்றன்ன தகைத்தரோ வென்
மதுர மிலாளர் தொடர்பு."—என்றபடி.

கரும்பைக் குருத்திலிருந்து தின்றால் வர வர இனிமை யதிகமாவதுபோல் கற்றோர் கேண்மையும் நாளுக்கு நாளினிப்பாகும். அதற்கு எதிர்செலத் தின்றால் வரவர இனிமை குறைவதுபோல கல்லார் நட்பு நாளுக்கு நாள் நலங்குறைந்து வெறுக்கப்படும்.

நல்லார் நட்பு நடுப்பகல் நீங்கி நாழிகை யேற ஏற நிழல் நீளுவதுபோல நாளுக்கு நாள் நலங்கொண்டு வளரும். தீயார் நட்போ காலையிற்றோன்று நிழல் முதல் நீண்டு அப்பால் வர வரக்குறைவதுபோல் துவக்கத்தில் மிகுதியாகத் தோன்றி பிறகு நாள் செல்லச் செல்ல குறைந்துவரும். இதனாலன்றோ அறிவுடையோர் கேண்மையை பிறைச்சந்திரனுக்கும் கயவர் கேண்மையைப் பூர்ணச்சந்திரனுக்கும் அறிவாளர் ஒப்பிட்டிருக்கின்றனர்.

"நிலத்தியல்பால்நீர் திரிந்தற்றாகு மாந்தர்க்
கினத்தியல் பதாகு மறிவு." என்றபடி,

நீரானது சேர்ந்த நிலத்தின் குணத்தைப் பெறுதல் போல் மனிதர்க் கறிவானது சேர்ந்த வினத்தான் குணத்தைப் பெறும்.

"அற்ற குளத்தில் அருநீர்ப் பறவைபோல்
உற்றுழித்தீர்வார் உறவல்லர்—அக்குளத்தில்
கொட்டியும் ஆம்பலும் நெய்தலும்
போலவே ஒட்டி உறுவார் உறவு."— என்றபடி,

தான் மேனிலையடைந்து தன் தோழன் கீழ்நிலையிலிருப்பினும் அவனை மறத்தலொண்ணாது இருப்பதே நட்பின் இலக்ஷணமாகும். இவ்வளவு முக்கியமான நட்பைப்பற்றி சிறுவர்கள் அதிகமாய்க் கவனிப்பது அபூர்வயம்.

இவ்வுலகத்தில் சிலர் தனது காரியம் முடியும் வரை நண்பன் போல் நடித்துப் பின்னர் தன்னை நம்பினவர்களை நட்டாற்றில் விட்டுப் போவாருமுளர். அவர்களை உண்மை நண்பனுகக் கைகொண்டால் பின்பு பல துன்பத்திற்காளாவோம்.

நேசத்தில் ஒரு விதமான தெய்விக சக்தி இருக்கின்றது. அந்த சக்தியை கெடுக்கவாவது தடுக்கவாவது எவருக்கும் ஆற்றலில்லை. பதினுயிரம் மைல்களுக்கு அப்பாலுள்ள ஒரு தோழன் நினைக்கும் காரியத்தை இந்த சக்தியின் பிரபாவத்தால் இருந்த இடத்திலிருந்தே அவனுடைய நண்பன் தெரிந்து கொள்ளுகிறான். இத்தன்மையான நண்பர்களோவெனில், இந்த ஒரு ஜன்மத்தால் மட்டும் நண்பர்களல்ல வென்பதும் பல பிறவிகளிலும் தோழர்களாக இருந்திருக்கிறார்களென்பதும் பெறப்படுகின்றது. ஏனெனில், இப்பூவுலகில் கோடிக்கணக்கான மனிதர்கள் இருக்க இப்பேர்ப்பட்ட நட்பு குறித்த சிலருள் மட்டும் விளங்குவதால்தான். 'இவ்வளவு கடினமான விஷயத்தைப் பற்றிச் சிந்திக்கும் வல்லமை சிறுவர்களான எங்களுக்கு இல்லை'யென நீங்

கள் கூற வருவீர்களாயின் நட்பு நாமாகச் செய்து கொள்ளுகிற விஷயமன்று.

"அழிதருநெறியிற் செலவினை விலக்கி
யாம்வழி செலுத்தி யூழ்வினையால்,
அழிவுவந் தடுப்பினதற்குட னல்லாந்
தாக்கை வேறன்றி யாருயிர்கள்,
ஒழி வகையின்றி யுணர்ச்சியொத்
தருநூலுணர் தொறு முறுநயம் போலக்
கழிமகிழ் நாளும் பயில்தொறும்
வளரக் கலப்பதே நட்பெனப் படுமால்."—என

விநாயக புராணம் கூறுவதும் இங்கு நன்கு உணரத்தக்கது. ஒருவனை நட்புச் செய்து கொள்ளுவதாயின் அவனது குணத்தையும் குடிப்பிறப்பையும் குற்றத்தையும், சுற்றத்தையுமறிந்து அவனோடு சினேகஞ் செய்யவேண்டும். இது பற்றியே பொய்யாமொழிப் புலவர்,—

"குணனுங் குடிமையுங் குற்றமுங்குன்றா
வினனு மறிந்தியாக்கநட்பு."—

எனக்கூறினர். மூர்க்கரோடு என்னுன்றும் சினேகித்தல் கூடாது. ஏனெனில்,—

நூறாண்டு பழகினு மூர்க்கர் கேண்மை
நீர்க்குட் பாசிபோல் வேர்க்கொள்ளாதே."—

எனப்பெரியோர் கூறி யிருக்கின்றனர்.

"சந்தன விருட்சத்தை யண்டிநிற் கின்றபல
தருவுமவ்வாசனை தரும்
தங்கமகமேருவை யடுத்திடுங் காக்கையுஞ்
சாயல் பொன்மயமே தரும்
பந்தமிகு பாலுடன் விளாவிய தணீரெலாம்
பால் போனிறங் கொடுக்கும்
படிக மணிகட்குளே நிற்கின்ற வடமுமப்
படியே குணங் கொடுக்கும்
அந்தமிகு மரகதக்கல்லைத் தரித்திடி
னடுத்ததும் பசுமையாகும்
ஆனபெரியோர்களோடு சகவாசமதுசெயின்
அவர்கள் குணம் வருமென்பது காண்."—

எனப்பெரியோர்கூறியிருக்கின்றமையால், நல்லோரை நட்புக் கொள்ளுதல் சாலச்சிறப்புடைத்து. ஆகையால் சிறுவர்களாகிய நீங்கள் தீய நடத்தையுடைய பையன்களுடையவும் மற்றவர்களுடையவும் சேர்க்கையை நீக்கவேண்டும். ஒருவன் உங்களிடம் வலுவில் வந்து தான் மகா சத்திய சந்தனென்றும் பராக்கிரமசாலியென்றும் கல்விமானென்றும் சொல்லி இவைகளைப் பற்றிப் பிரமாணமும் செய்வானாயின் அவன் உங்களை வஞ்சிக்கிறான் என்பதை நீங்கள் அறியவேண்டும். அவன் சொன்னவை உண்மையா யிருக்கவேண்டுமாயின் அவன் பிரமாணம் செய்யவேண்டிய அவசியமில்லை. ஆனதால் அவன் சொல்வது முழுவதும் பொய். உங்களுடைய குடும்ப இரகசியத்தையும் ஆத்ம ரகசியத்தையும் வெளியிடாதீர்கள். இவை உங்களுடைய கடமை. மனிதனுடையமுக்கிய கடமைகளில் இவை முதன்மை பற்றியவை. இவ்விளவயது முதலேநீங்கள்இந்த நட்பை சற்று கவனித்து வருவீர்களாயின், பெரியவர்களான பின்பு நல்ல நண்பனை அடைவதோடு இந்த நட்புச் சக்தியைக்கொண்டே இறைவனையும் கண்டு கொள்வீர்கள். சுபம்.

எம். நாராயணஸ்வாமி ஐயர்.

## "அரும்பொருட் திரட்டு"

இப்பெயர்கொண்ட அரிய புஸ்தகமொன்று நமது பார்வைக்கு வந்து பல நாளாகிறது. அதைப் பார்வையிட்டு விஸ்தாரமாயெழுதவும் அதன் பெருமையைக்கூறவும் அவகாசமின்றித் தாமதிக்கலானதற்காக வியசனிக்கிறோம். சுருங்கச்சொல்லில் அப்புஸ்தகம் தமிழ் மொழிப்பயிற்சிக்கு இன்றியமையாத சாதனமாயிருக்கிறது. ஆங்கிலத்தில் கண்ட உயர் பாவங்களைத் தமிழில் மொழிபெயர்த்தல் கஷ்டமென்பது பொருந்தாத வசனம். தமிழ் என்றாலே இனிய மொழியென்று அர்த்தம். அதைக் கொடுமைப்படுத்தி பொருள் விளங்காது ஆங்கில பாஷையின் இலக்கணங்களை யமைத்து இலக்கியம் பொருந்தாது பின்னப்படுத்துகிறவர்கள் தங்கள் அறியாமையை அவர்கள் தாய் பாஷையின் தலையிலேற்றி "பெற்ற தாயை விற்றடிமை கொள்ளுகின்ற பேதைகளாய்" விளங்குகிறார்களென்பது இதை நன்றாக ஆராய்ந்து பார்ப்பாருக்குத் தானே விளங்கும். இதை இயற்றியவர் மதுரைக் காலேஜ் தமிழ்ப்பண்டிதர் ஸ்ரீ ம. கோபால கிருஷ்ணய்யர். அவருக்குத் தமிழுணரும் மாணவரெல்லாம் கடமைப் பட்டிருக்கிறார்கள்.